உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருக்கைலாயபரம்பரைத் தருமபுரவாதீன

மடாலயஸ்தாபகராகிய

# ஸ்ரீமத் குருஞானசம்பந்ததேசிகர் சரித்திரசாரசங்கிரகம்.

ஷை குருஞானசம்பந்ததேசிகசுவாமிகளால்

திருவாய்மலர்ந்தருளிய

## சொக்கநாதக் கலித்துறை

ஞானப்பிரகாசமாலை யென்னும்

## பண்டாரக் கலித்துறை

இவைகள்

ஷை தருமபுரவாதீன மடாலயத்தின்கண் எழுந்தருளியிராநின்ற

22-வது மகாசந்நிதானமாகிய

ஸ்ரீமத் மாணிக்கவாசகதேசிக ஞானசம்பந்தசுவாமிகளின்

கட்டளைப்பிரகாரம்

ஷை ஆதீனத்தைச்சேர்ந்த மகாவித்வான்

தரு. ஞா. சண்முகசுவாமி அவர்களால்

பரிசோதிக்கப்பட்டு

ஷை ஆதீனத்தைச் சேர்ந்த திருவாரூர் இராஜாங்கட்டளை

சுப்பிரமணிய சுவாமிகளால்

கும்பகோணம்

யதார்த்தவசனீ அச்சியந்திரசாலையில்

கலியுகாதி 5023 துன்மதி௵ மாசி௴ 13௳

பதிப்பிக்கப்பெற்றது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருக்கைலாயபரம்பரைத் தருமபுரவாதீன

மடாலயஸ்தாபகராகிய

# ஸ்ரீமத் குருஞானசம்பந்ததேசிகர்

# சரித்திரசாரசங்கிரகம்.

ஷை குருஞானசம்பந்ததேசிகசுவாமிகளால்

திருவாய்மலர்ந்தருளிய

## சொக்கநாதக் கலித்துறை

ஞானப்பிரகாசமாலை யென்னும்

## பண்டாரக் கலித்துறை

இவைகள்

ஷை தருமபுரமாதீன மடாலயத்தின்கண் எழுந்தருளியிராநின்ற

22-வது மகாசந்நிதானமாகிய

ஸ்ரீமத் மாணிக்கவாசகதேசிக ஞானசம்பந்தசுவாமிகளின்

கட்டளைப்பிரகாரம்

ஷை ஆதீனத்தைச்சேர்ந்த மகாவித்வான்

தரு. ஞா. சண்முகசுவாமி அவர்களால்

பரிசோதிக்கப்பட்டு

ஷை ஆதீனத்தைச் சேர்ந்த திருவாரூர் இராஜாங்கட்டளை

சுப்பிரமணிய சுவாமிகளால்

கும்பகோணம்

யதார்த்தவசனி அச்சியந்திரசாலையில்

கலியுகாதி 5023 துந்துபிஸு மாசிமீ 13உ

பதிப்பிக்கப்பட்டது.

# சிறப்புப்பாயிரம்.



திருக்கைலாயபரம்பரைத் தருமபுரவாதீனம்
மஹாவித்துவான்
தரு. ஞா. சண்முகசுவாமிகளின் மாணாக்கராகிய
திருவாரூர் இராஜாங்கட்டளை
சுப்பிரமணியத்தம்பிரான்சுவாமிகள்
இயற்றியது.



கட்டளைக் கலித்துறை.

கருஞான சம்பந்தம் யாவையு மோட்டிக் கதியளிக்குந்
திருஞான சம்பந்த தேசிக னாகத் திகழ்தருமைக்
குருஞான சம்பந்தக் கோன்புகழ்க் காதையைக் கூறினனால்
வருஞான சம்பந்த மன்னருட் சண்முக மாமுனியே.



## குருபரம்பரைத் தோத்திரம்.

*அருள்ஞானப் பிரகாச குருஞான சம்பந்த ரானந்த பரவசஞ் சீ*
*ரருட்சச்சி தாநந்தர் மாசிலா மணிமூர்த்தி யணிஞான சம்பந்த ராங்*
*திருஞான சம்பந்தர் திருவம்ப லவாழ வியதிருச் சிற்றம்ப லர்*
*திருநாவுக் கரசகுரு சிவஞான தேசிகர் திகழ்சச்சி தானந்த ரே*
*தருமைமுத் துக்குமர குருஞான சம்பந்தர் சாற்றுகந் தப்பகுர வர்*
*தகுமாசிலா மணியர் சச்சிதா னந்தகுரு சாருமா ணிக்கவா சகர்*
*மருவுசிவ ஞானகுரு மாணிக்க வாசகர் வாழ்த்துசிவ ஞானகுர வர்*
*வளர்சச்சிதா னந்தர் மாணிக்க வாசகர்த மலரடி யிறைஞ்சி வாழ்வாம்.*

மெய்கண்டதேசிகன்றிருவடிவாழ்க.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்கைலாயபரம்பரைத் தருமபுரவாதீன மடாலய ஸ்தாபகராகிய ஸ்ரீமத் குருஞானஸம்பந்த தேசிகர் சரித்திரசாரசங்கிரகம்.

## குருபரம்பரை வாழ்த்து.

கயிலாய பரம்பரையிற் சிவஞான சித்திநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான பானுவாகிக்
குயிலாரும் பொழிற்றருமை வாழ்ஞான சம்பந்தக் குரவன் மேலாஞ்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி தழைக மாதோ.

நன்னா ருடன்செயும் பாமாலை சூடுநன் னாவலரைப்
பன்னாத பேரின்ப வீடாளச் செய்யும் பதாம்புயனே
யென்னாக மாவி பொருண்மூன்று மேற்றெனக் கின்பருள்வாய்
தென்னா தருமைச் சிவஞான சம்பந்த தேசிகனே!

## நூல்.

பூவுலகினுந் தேவுலகமாய் விளங்காநின்ற இப்பூவுலகின் கண்ணே, மிகச் சிறப்புற்றோங்கிய நவகண்டங்களினுள்ளுந் தவகண்டமாகிய பரதகண்டத்திலே, சிவபூமியாய் விளங்கியோங்குஞ் செந்தமிழ்நாட்டிலே, தென்னாடாகிய பாண்டிவளநாட்டின்கண் சிறந்த நிலவளமும் நீர்வளமும் பொருந்திய ஸ்ரீவில்லிபுத்தூரின்கண்ணே, சுமார் நானூறு வருடங்களுக்குமுன்னரே,

சிறப்புற்ற கார்காத்த சைவவேளாளர் குலத்திலே, சிவநேசச் செல்வமிகுந்த சுப்பிரமணியபிள்ளை யென்பவர் செய்த சிவபூஜா புண்ணியபலமேலீட்டினாலே, அவர் மனைவியாராகிய கற்பிற்சிறந்த மீனாக்ஷியம்மையாரிடத்திலே, கருணாநிதியாகிய ஸ்ரீ சிவபெருமான் இத்தமிழ்நாட்டின்கண்ணே, மாயாவாதம் சமவாதம் முதலிய புற மதங்கள் தலையெடுத்துத் தம் சைவசமயத்தையும் தம்மடியார்களை யும் நிந்தித்துப் பலவிதமான இடையூறு செய்துலாவி மிகுதலை, வேதாகமப் பிரமாணங்களாற் கண்டித்து, சைவசமய ஸ்தாபனமுஞ் சிவஞானோபதேசமுஞ் செய்தருளிச் சிவனடியார்களை யாண்டரு ளத் திருவுளங்கொண்டு திருவருளே திருமேனியாயுற்று மங்கள சுபமுகூர்த்தங்கள் நிறைந்த சோமவாரதினத்திலே, திருவவதாரஞ் செய்தருளி, மூன்றாம் பாலமதிபோல் ஒவ்வொருநாளுந் திருமேனி யுஞ் சிவஞானமும் மேன்மேலும்வளர வளர்ந்துவந்த காரணத்தால், தாய்தந்தையர்கள் களிப்புற்று ஞானசம்பந்தன் என்னுந் திருநாம மிட்டழைக்கப்பெற்றுப் பதினாறுமாண்டுக்குள் தென்மொழி வட மொழிக ளிரண்டினு மிகவல்லராய், ஆகம சாஸ்திரங்களெல்லாம் தமது குலகுருமூலமாய் விரைவில் ஓதியுணர்ந்து, சிவஞானச் செல் வராய் விளங்கித், தமது தாய்தந்தையர்கள் கண்டுகளித்து ஆனந்த வாரிதியில் மூழ்கி மகிழும்வண்ணம் வாழ்ந்துகொண்டிருந்தாராயி னர்.

இவ்வாறிருந்து வருங்காலத்தில், ஒருநாள் ஞானசம்பந்தரு டைய தாய்தந்தையர்கள், தங்களுடைய ஆத்மார்த்த மூர்த்தியாகிய சோமசுந்தரக்கடவுளைத் தரிசிக்க விரும்பி, மதுரைக்குப் புறப்படுங் காலையில், தமது அருமைப் புதல்வராகிய ஞானசம்பந்தரையுங் கூட வழைத்துக்கொண்டு போய்ச் சோமசுந்தரக்கடவுளையும் மீனாக்ஷியம் மையாரையுந் தெரிசித்துக்கொண்டு சிலநா ளங்கேயே தங்கியிரு ந்து, தங்களூருக்குத் திரும்புகையிற் றம்புதல்வராகிய ஞானசம் பந்தரையு மழைக்க, அவர் அத் தாய்தந்தையர்களைப்பார்த்து, 'என் தாய்தந்தையர்க ளிவ்வாலயத்தின்கண்ணே யிருக்கையில், அவர்களை விட்டுப் பிரிந்து பொய்யா யழிந்தொழியும் உங்களுடன் வரேன்.' என்று பலசாஸ்திரவாயிலாகச் சமாதானஞ்சொல்ல, அவர் கள் ஒருவாறு மனமகிழ்ந்து, மதுரையிலேயே அவரிஷ்டம்போ லிருக்குமாறு விட்டுப்போயினர்.

பின்பு ஞானசம்பந்தர் தினந்தோறும் பொற்றாமரைத் தடாகத்தில் ஸ்நாநாநுஷ்டானங்களாகிய நித்தியகர்மங்களை முடித்துக்கொண்டு, ஆறுகாலமுஞ் சோமசுந்தரக்கடவுளையும் மீனாக்ஷியம்மையாரையும் தரிசித்து வணங்கித்துதித்துப் பலநாள் வசித்துக்கொண்டு வருகையில், அன்பு மேலீட்டினாலே சோமசுந்தரக்கடவுள்மீது 'சொக்கநாதவெண்பா' என்னும் ஒரு பாமாலை பாடிச்சாத்தி, இன்னருள்பெற் றிருந்துவருநாளில், ஒருநாள் பொற்றாமரைத் தடாகக் கரையிற் சில சிவனடியார்கள் நெருங்கியிருந்து சிவபூஜைசெய்து ஆனந்தக்கண்ணீர்விட்டுத் தோத்திரஞ்செய்தலைக் கண்ணுற்றுத் தாமும் அவ்வாறு சிவபூஜைசெய்தானந்தமுற விரும்பிச் சோமசுந்தரக் கடவுள் முன்னிலையிற் சென்றுநின்று பிரார்த்தித்துக் கேட்டுக்கொண்டவண்ணமே, தம்மிருக்கைசேர்ந்து அன்றிரவில் நித்திரைசெய்யக் கனவின்கண் சோமசுந்தரக்கடவுள் எழுந்தருளிவந்து காட்சி கொடுத்தருளி, 'ஞானசம்பந்தா! நாம் சிவலிங்க ரூபமாகப் பொற்றாமரைத்தடாகத்தின் ஈசானமூலையில் கங்கைக்குள்ளிருக்கின்றோம். காலையி லங்குச்சென்று மூழ்கி யெடுத்து உன்னிஷ்டப்படி பூஜிப்பாயாக!' என்று கட்டளையிட்டுத் திருவுருமறைந்தருளலுந் திடுக்கிட்டெழுந்து விழித்ததிசயமுற்று, ஆனந்தக் கூத்தாடித் தோத்திரித்தவண்ணமே, அதிகாலையில் பொற்றாமரைத் தீர்த்தத்திற்சென்று கட்டளைப்பிரகாரம் மூழ்கிப் பார்க்குங்கால், தானே பெட்டகக் கோயிலோடுந் தங்கையில்வந் தெழுந்தருளிய சிவலிங்கத்தை யெடுத்துப் பூசித்து, ஆனந்தக்கூத் தாடிக்கொண்டு சந்நிதானத்திற் சென்று, சோமசுந்தரக்கடவுளைத் தரிசித்துவணங்கி,

கண்ணுக் கினிய பொருளாகி யேயென் கரத்தில்வந்தாய்
விண்ணும் பரவிடு மற்புத மேயென்ன விஞ்சையிதான்
மண்ணும் புகழ்ந்திட வென்னையும் பூரண வாரியுள்ளே
நண்ணும் படிசெய் மதுரா புரிச்சொக்க நாயகனே.

என்னும் சொக்கநாதக்கலித்துறையைப் பாடி, 'அடியேன் விரும்பிய வண்ணங் கிருபைசெய்தருளினீர், இனி இச்சிவலிங்கத்தைப் பூஜித்துய்தற்கேதுவாகிய சிவஞானோபதேசமுஞ் செய்தருளுஞ் சிவாசாரியரையும் அனுக்கிரகித் தருளவேண்டும்.' என்று பிரார்த்தித்து விடைபெற்றுக்கொண்டு, தம்மிருக்கையிற்சார்ந்து அன்றிரவில் நித்

திரைசெய்கையில், முன்போல் சோமசுந்தரக்கடவுள் எழுந்தருளி வந்து காட்சிகொடுத்தருளி, 'ஞானசம்பந்தா! திருவாரூரின்கண்செ ன்று நமதுபதேச சாம்பிரதாய பரம்பரையில்வந்த ஞானப்பிரகாச தேசிகனிடத்தில் ஞானோபதேசம்பெற்று, நம்மைப்பூஜித்து வாழ்வா யாக!' என்று, கட்டளையிட்டருளி மறைந்து, திருவாரூரில் ஞா னப்பிரகாச தேசிகரிடத்திற் சென்று, கனவிற்றோன்றி, 'ஞானப் பிரகாசனே! வருகிற சோமவாரத்தன்று உன்னிடம்வருகிற நமது ஞானசம்பந்தனுக்கு விதிப்படி சிவஞானோபதேசஞ்செய்து, சிவ லிங்கபூஜையும் எழுந்தருளப்பண்ணிவைப்பாயாக!' என்று கட் டளையிட்டு மறைந்தருளினார்.

உடனே ஞானப்பிரகாசதேசிகர் சோமசுந்தரக்கடவுள் தம் மேற் கருணைகூர்ந்து எழுந்தருளிவந்து கனவிற்கட்டளையிட்டருளி யதைச் சிரமேற்கொண்டு வணங்கித் திடுக்கிட்டெழுந்து மெய் சிலிர்த் தானந்தக்கண்ணீர்பொழியத் தோத்திரித்துவணங்கி கட் டளையிட்டருளிய சோமவாரதினத்தை எதிர்பார்த்திருந்தனர்.

அச்சோமவார தினத்தில் அதிகாலையிலெழுந்து கமலாலயத் தில் ஸ்நானஞ்செய்து, நித்திய கர்மானுஷ்டான சிவபூஜாதிகளை முடித்துக்கொண்டு, சிவாலயத்திற்சென்று, தியாகராஜப்பெருமா னைத் தரிசித்து, சித்தீச்சரத்திலுள்ள தமதுபாசனாமூர்த்தியாகிய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி பகவானுக்கு, விசேஷ அபிஷேக நைவேத் திய தீபாராதனைகளுஞ் செய்வித்து, அச் சந்நிதானத்திற் கிழக்கு முகமாய் வீற்றிருந்து, ஞானசம்பந்தர் வரவை எதிர்பார்த்துக்கொ ண்டிருந்தனர். இவர் இவ்வாறிருக்க:

மதுரைமாநகரத்தில் ஞானசம்பந்தர் தமக்குக் கனவின்கண் சோமசுந்தரக்கடவுள் கட்டளையிட்டருளியதைக் கேட்டுத் திடுக் கென நித்திரைவிட்டெழுந்து, மெய்சிலிர்த்து, ஆனந்தபாஷ்பம் பொழியத் தோத்திரித்துவணங்கி, அதிகாலையிலெழுந்து, சிவாலயத் திற்சென்று, பொற்றாமரைத் தடாகத்தின்மூழ்கி, நித்திய கர்மா னுஷ்டானம் சிவபூஜாதிகளை முடித்துக்கொண்டு, சோமசுந்தரக்கட வுளையும், மீனாக்ஷியம்மையாரையுந் தரிசித்துவணங்கிப் புறவிடை பெற்று, அங்குநின்றும் புறப்பட்டு மத்தியிலுள்ள திருவானைக்கா முதலிய சிவஸ்தலங்களையெல்லாந் தெரிசித்துக்கொண்டு அச் சோம

வார தினத்தில் அதிகாலேயிற் றிருவாரூரை யடைந்து, கமலாலய தீர்த்தத்திில்மூழ்கி, நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, சிவாலயத்திற்புகுந்து, பிரதக்ஷிண நமஸ்காரஞ் செய்து, விநாயகரைத் தரிசித்துவணங்கிச் சந்நிதானத்திற் புகுங்காற் றம்மையறியாமல் ஆனந்தக்கண்ணீர்சொரிய, மெய்சிலிர்க்க, நாத்தழுதழுக்க, நடைதள்ளாடச்சென்று, திருமூலட்டானேசுரரையும், தியாகராஜப்பெருமானையும் வணங்கித்துதித்து, நீலோத்பலாம்பிகையையும் தரிசித்து வணங்கிக் குருநாதன் றரிசனம் எப்போது கிடைக்குமோவென்று நினைத்து விரைவாய்ப் பிரதக்ஷணம்வருகையில் எதிரேயுள்ள சித்தீச்சரத்தின்கண் தக்ஷிணமூர்த்தி சன்னிதானத்தில் அத் தக்ஷிணமூர்த்திபகவானே தம்மையாண்டருள வேண்டுமென்னும் பெருங் கருணையினாலே, மானிடவுருக்கொண்டு, எழுந்தருளியிருக்கிறதென்றறிவுறக் கிழக்குமுகமாய்ப் பெருங்கருணையோடும் ஈனமல விருளொழிக்கியருளும் ஞானபானுவே யென வீற்றிராநின்ற குருமூர்த்தியாகிய ஞானப்பிரகாசதேசிகரைக் கண்டவுடன் தம்மிறைவன் உணர்த்தியருளிய ஞானப்பிரகாச தேசிகரிவரே யென்று தெளிந்து காந்தங் கண்ட இரும்பேபோல் விரைவிற்சென்று, திருவடிகளில்வீழ்ந்து, ஆனந்தபரவசராயினர்.

அஃதுணர்ந்த ஞானப்பிரகாசதேசிகர் மிகுந்த பேரன்போடும் ஞானசம்பந்தரைத் தம்மிருகரங்களால் எடுத்துச்சிரமோந்து சயித்தியோபசாரஞ்செய்து, ‘ஞானசம்பந்தா’ என்று தட்டியெழுப்பிப் ‘பயப்படாதே’ யென்று அபயங்கொடுத்து, சன்னிதானத்தில் வடக்குமுகமா யுட்காரவைத்துத், திருவருணோக்கத்தால் ஞானதீக்கைசெய்து, மெய்யாதி முப்பொருளுங்கொண்டு ஐயாதி முப்பொருளும்விண்டு, (பசு பதி பாசம்) அவர்சிரமேற் றிருவடிக் கமலஞ்சூட்டி, முத்திபஞ்சாக்ஷரத்தாற் சிவஞானோபதேசமுஞ் செய்து, சிவத்தோடைக்கியமாம் அத்துவிதாநந்த நிலயமாகிய நித்தியானந்த வீடருளிச் சொக்கலிங்கத்தை யெழுந்தருளப்பண்ணித் திருக்கரத்திற் கொடுத்தருளினர்.

உடனே அச் சொக்கலிங்கத்தினை ஞானபூஜாவிதிப்படி பூஜித்து, தாம் சொக்கநாதக்கலித்துறையைப் பாடித்துதித்துப் பிரார்த்தித்து, தம் குருநாதனாகிய ஞானப்பிரகாச தேசிகரை

அருவுமுருவுமருவுருவமில்லா ஆண்டான் என்னும் வெண்பாக்களாற் பலவாறு தோத்திரித்துக்கொண்டு, திருவடிகளில் வீழ்ந்து, பேரானந்தக்கண்ணீராட்டிப் பூசித்துநிற்க, ஞானப்பிரகாசதேசிகர் புன்னகைபுரிந்து திருவருளோடுஞ் சிவபிரான் திருநந்தி தேவருக்குத் திருவாய்மலர்ந்தருளிய சிவஞானபோத மாபாடியமாகிய சிவஞான சித்தியாரை யையந்திரிபற வுணர்த்தியருளினார்.

இவ்வாறு திருவாரூரில் ஞானப்பிரகாச தேசிகரிடத்து, ஞானோபதேசம் பெற்றருளிய ஞானசம்பந்தர், சொக்கலிங்கமூர்த்தியை ஞானபூஜாவிதிப்படி பூஜித்து, சிவஞானசித்தியைக் கேட்டு சிந்தித்து தெளிந்து நிட்டைகூடிப் பலநாள் குருக்ஷேத்திர வாசஞ் செய்துகொண்டு, குருபணிவிடையை நிழல்போற் பிரியா தியற்றிக் கொண்டு வருநாளில், ஒருநாள் தம்மைப்போன்ற பலசீடர்கள் சூழக் குருமூர்த்தியோடு கோயிலுக்குப் போய் அர்த்தசாம தெரிசனஞ்செய்து திரும்பிவருகையிற் கைவிளக்குப் பணிவிடைக்காரன் றூங்கிவிட்டமையால் ஞானசம்பந்தர் தாமே விரைவிற்சென்று கைவிளக்கை யெடுத்துக்கொண்டு, இன்று இப்பணிவிடை நமக்குக் கிடைத்ததே யென்று பெருமகிழ்ச்சியாய் குருநாதனுக்கு முன்செல்ல, மடத்துக்குள் ஞானப்பிரகாச தேசிகர்புகுங்கால், ஞானசம்பந்தரைநிற்க வென்று கட்டளையிட் டருளிச்சென்று, போசனமுதலியனவுஞ்செய்து நித்திரைசெய்தருளினார்.

ஞானசம்பந்தரும் அக் குருமூர்த்தியின் வாக்கின்பிரகாரம் கைவிளக்கைப் பிடித்தவண்ணமே தமக்குபதேசித்தருளிய சிவஞானோபதேச நிலையிலேயே விடியும்வரையும் நின்றருளினார். திருவருளினா லன்றிரவு பெய்த விடாமழைகள் அவர் திருமேனியில் விழாது, ஒருகெஜ தூரம்வரையும் சுற்றிலும் கோடுகட்டினதுபோல், கீழ்ப்பூமியிலும் சலம்புகாமல் நின்றது. இவ்வாறிருந்ததை விடியற்காலத்திற் சாணந் தெளிக்கவந்த பெண்டுகள்கண்டு, மனம் அதிசயித்து உள்ளேதிரும்பியோடி ஞானப்பிரகாசதேசிகருக்குத் தெரிவிக்க, அவர்உடனே திடுக்கிட்டெழுந்து ஓடிவந்துபார்த்துத் திருவருளின்மகிமையைச்சிந்தித்து, ஆனந்தக்கண்ணீர்சோர, எனது குருஞானசம்பந்தா! வென்று கூப்பிட்டுக்கொண்டு, சமீபத்திற்சென்று, தமதிரு கரங்களாலும் ஞானசம்பந்தேசிகரை யிறுகப்புல்

லிக்கொண்டு, அப்பனே 'நீர் நாமும்வணங்கும் குருராயராகி விட்டீர்' என்று பேரன்போடு முரைத்து, 'இனி நீர் இஷ்டப்பிரகாரம் வேண்டியவிடத்திற் சென்றிருந்துகொண்டு, உம்மை வந்தடைந்த பக்குவர்களுக்குச் சிவஞானோபதேசஞ்செய்து பாதுகாத்து, மடாதிபதியாக வாழக்கடவீர்' என்று கட்டளையிட்டருள, ஞானசம்பந்ததேசிகர் இடியினைக்கேட்ட நாகம்போலத் திடுக்கிட்டுக் கீழேவிழுந்து புரண்டு அழுது, அடியேனெவ்வாறு தேவரீரைவிட்டுப் பிரிந்திருப்பேன் என்று பலவாறு புலம்பிக்கொண்டு நின்று 'அடியேனுக்குஞ் சுதந்தரமுண்டோ?' என்று சொல்லி,

கனக்கும் பொதிக்கு மெருதுக்குந் தன்னிச்சை கண்டதுண்டோ
வெனக்கு முடற்கு மெனதிச்சை யோவிணங் கார்புரத்தைச்
சினக்குங் கமலையுண் ஞானப்ர காச சிதம்பரவின்
றுனக்கிச்சை யெப்படி யப்படி யாக வுரைத்தருளே.

என்னுங் கட்டளைக்கலித்துறையாற் றம்முடைய கருத்தைத் தெரிவிக்கக் கேட்டருளிய ஞானப்பிரகாசதேசிகர், பேரன்போடு மனமகிழ்ந்து ஞானசம்பந்தரே! நமதூருக்கு வடக்கே இரண்டு யோசனை தூரத்துக்கப்பாலுள்ள மாயூரத்துக்குக் கிழக்குத்திக்கில் ஒரு குரோச தூரத்துக்குள், எமதருமராஜனாற் பூஜிக்கப்பெற்று, அகஸ்தியமுனிவர் முதலிய மகான்களாற் றெரிசித்து வணங்கப்பெற்ற வில்வாரண்ணியமாகிய தருமபுரத்திற் சென்றுவசித்து, உமது பக்கல் வந்தடைந்த பக்குவிகளுக்கு ஞானோபதேசஞ்செய்து போலியாகிய புறமதங்களை வேதாகம முதலிய பாசுபதாஸ்திரங்களால் வென்று, சைவசமய ஸ்தாபனஞ்செய்து, சைவசித்தாந்த சமரச சன்மார்க்க சமயபரிபாலன பீடாதிபதியாய்வாழக்கடவாய்!' என்று கட்டளையிட் டருளியபடியே, புறவிடைபெற்றுக்கொண்டு பிரிவாற்றாராய்ப் புறங்காட்டாது, கோபுரத்தைத் தரிசித்தவண்ணம் குருமூர்த்திமேற் பேரன்போடும், ஆனந்தக்கண்ணீர் சொரிய ஞானப்பிரகாசமாலையைப் பாடிக்கொண்டுசென்று, கோபுரமறைந்தபிறகு திரும்பி, மத்தியிலுள்ள ஸ்ரீவாஞ்சிய முதலிய சிவஸ்தலங்களையெல்லாந் தெரிசித்து வணங்கிக்கொண்டு, மாயூரத்தை யடைந்து, காவேரியில் ஸ்நானஞ்செய்து நித்யகர்மானுஷ்டான முதலியவைகளை முடித்துக்கொண்டு, சிவாலயத்துட் சென்று, மாயூரநாதரையும் அஞ்சனாயகியையும் தரிசித்துவணங்கி விடைபெற்றுக் கிழக்குத்

கிக்கிலுள்ள தருமபுரத்தையடைந்து, தருமபுரீஸ்வரரையும் அபயாம்பிகையையும் தரிசித்துவணங்கி, அக்கோவிலின் மேற்புறத்திலுள்ள வில்வாரண்ணியத்தில் ஓராசிரமத்துள் வசித்து, சொக்கலிங்கப்பெருமானைப் பூஜித்துக்கொண்டு, தம்மையடைந்த பக்குவர்களுக்கு ஞானதீக்கை புரிந்து ஞானோபதேசஞ்செய்து, சிவஞான சித்தியாரை ஐயந்திரிபற வுணர்த்தி கேட்டல் சிந்தித்தில் தெளிதல் நிட்டைகூடல் முதலியவைகளால் ஞானயாகஞ்செய்து, ஓரறிவுயிராகிய தாபரமுதல் ஆரறிவுயிராகிய தேவரீறுய சகல வுயிர்களுக்குஞ் சுத்தாத்வைத சைவசித்தாந்த சமரசசன்மார்க்க நிலையினை யுபதேசித்து, நித்தியானந்த முத்தியை யீந்தருளிப் பாதுகாத்து, குருராயதேசிகமணியாய் மெய்கண்டசந்தான தேசிகபீடாதிபதியாய் எழுந்தருளியிருந்து, சிவபோகசாரம், முத்திநிச்சயம், பேரானந்த சித்தியார் முதலிய உண்மைநூல்களாகிய ஞானசாத்திரங்களையும், அனேக தோத்திரங்களையுஞ் செய்தருளி, அனேக அற்புதங்களால் திருவருளை விளக்கிக்கொண்டு, ஜெகத்குருவாய் விளங்கி அநேகவருடகாலம் எழுந்தருளியிருந்தனர்.

அவ்வாறிருக்கையில், அத் தருமபுரத்திலுள்ள தருமபுரீசுரருக்கு, நித்திய நைமித்திய முதலியவைகளை நடாத்திக்கொண்டு வந்த அகஸ்தியருடைய மாணாக்கர்களாகிய முனீந்திரர்கள் இஞ் ஞானசம்பந்ததேசிகரது பிரபாவமுதலியவைகளைக்கண்ணுற்றுப் பேரானந்த முற்றவர்களாய்த் தங்களுடைய ஆசிரமங்களையும் சிவாலயத்தையும், அவரிடம் ஒப்புவித்து, அவைகளைப் பரிபாலித்து வரத் தருந்த இரசவாத முதலிய பலசித்திகளையும் உபதேசித்து, ‘எங்களைப்போல் மேற்கூறிய ஆச்சிரமத்தையும், சிவாலயத்தையும், பாதுகாத்து, நீரும் உமக்குப் பின்வரும் சந்ததியாரும் பரம்பரையாய்ப் பரிபாலித்து வரக்கடவீர்கள்’ என்று ஆசீர்வதித்து, தங்களுடைய ஸ்தானமாகிய திருக்கயிலாயத்தை யடைந்தருளினார்கள்.

அதன்பிறகு ஞானசம்பந்ததேசிகர் சிவாலயத்தையும் சிவனடியார்களாகிய திருக்கூட்டங்களையும், தமது பெருங்கருணையினாற் பாதுகாத்துக்கொண்டு, ஒருவரையும் எதிர்பாராது சிவாலயத் திருப்பணி மகோற்சவம் முதலியவைகளை நடாத்திகொண்டு வருகையில், தமக்குச் சமீபத்தில் பரிபூரணதசை வருதலைத் திருவருளு

ணர்த்த வுணர்ந்து சிவாலயத்துக்கு மேற்கே, திருக்கோயில்கட்டிச் சிவலிங்கப் பிரதிட்டைசெய்து, அச்சிவலிங்கப் பெருமான் றிருவடிநிழலிற் சமாதிகூடத் திருவுளங்கொண்டு, தமதடியார்களில் அதிதீவிர பக்குவராகிய ஆநந்தபரவசருக்கு ஞானோபதேசஞ்செய்து, தமது பீடாதிபத்தியத்தையும் சொககலிங்கத்தையுங் கொடுத்தருளி, 'இனி நீர் நமது பீடத்திலிருந்துகொண்டு, ஞானோபதேசஞ்செய்து, பக்குவர்களையுஞ் சொக்கலிங்கத்தையும் சிவாலயத்தையும் பரிபாலித்து வாழ்ந்துவரக்கடவீர்?' என்று கட்டளையிட்டருளி, சிவசமாதிகூடியருளலும், ஆனந்தபரவசதேசிகர் அதிதீவிர பக்குவரானபடியால் சிவஞானமேலீட்டினால், ஆனந்த பாஷ்பம் பொழியச் சமாதிமுன்னிலையில் வீழ்ந்து, நமஸ்கரித்தெழுந்து, ஞானசாரியருடைய சமாதியின் மேற்புறத்திற்சென்று, குருமூர்த்தியின் திருக்கோயிற் சிகரத்தைத் தெரிசித்தவண்ணம் கிழக்குமுகமாயிருந்து, சமாதிகூடி மேலாச் சிவானந்தாத்வைத முத்திநிலையெய்தியருளினார்.

அஃதுணர்ந்த திருக்கூட்டத்தார்களாகிய மெய்யடியார்கள், மிகவுங் கவலையுற்றவர்களாய், பரிபூரண தசையையடைந்த குருஞானசம்பந்தமூர்த்தி சன்னிதானத்தையடைந்து, ஆனந்தபரவசதேசிகர் உடனே சமாதிகூடி முத்தியடைந்த நிலையினைத்தெரிவித்துசுவாமிகள்மீளவும்எழுந்தருளிவந்து, வேறொருவரை நியமித்து பரம்பரைச் சம்பிரதாயத்தையும், அடியேங்களையும் ரக்ஷித்தருளவேண்டுமென்று, பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்ளத் திருவுள்ளத்துத் திருவருளாலுணர்ந்து, மீளவுஞ் சமாதியினின்று மெழுந்தருளிவந்து, தம்மடியார்களில் மந்தபக்குவராகிய சச்சிதானந்தர் என்பவரைத் தெரிந்தெடுத்துத் தமது திருநோக்கத்தால் ஞானபிஷேகஞ்செய்து, தமது பீடாதிபத்தியத்தையுஞ் சொக்கலிங்கத்தையுங் கொடுத்தருளியும், ஞானசமாதி கூடிவராமையால், அச் சச்சிதானந்ததேசிகரைத் திருவருணோக்கஞ்செய்து,

தானந்த மாதிநடு வில்லா தோங்குஞ்
சச்சிதா னந்தமயந் தானே யாய
வானந்த பரவசனைக் கண்டுங் கண்டு
மந்தந்தோ பாகநிலை யறிந்தீ ரில்லை

மானந்தான் வடிவாகி நிற்ற லாலோ?
மலமாயை கன்மமிவை மடியா தாலோ?
ஞானந்தா னுமதுளத்தி லுதியாதாலோ?
நாமறியோ முமதுமய னவிற்று வீரே.

என்று திருவருட் பாடலைத் திருவாய்மலர்ந்தருளலும், சிவ சமாதி நிலையினைக் கூடியுணர்ந்தனர். அஃதுணர்ந்து மகிழ்ந்தருளிய குரு ஞானசம்பந்ததேசிகர் அச் சச்சிதானந்த தேசிகரைப் பார்த்து, 'இனி, நீர் நமது பீடாதிபதியாய் வீற்றிருந்துகொண்டு, சொக்கலிங்கப்பெருமானைப் பூஜித்துத் திருக்கூட்டத்துள்ள அடியார்களை நேசித்து, பத்தர்களைவிசுவாசித்துப் பாதுகாத்துப் பக்குவிகளுக்குச் சிவஞானோபதேசஞ்செய்து, நீடூழி வாழ்ந்துவரக்கடவீர்' என்று கட்டளையிட்டருளி, வைகாசிமாசம் அமரபக்க சப்தமி தினத்திலே, சிவசமாதிகூடிச் சிவானந்தாத்வைத பரிபூரணநிலையாகிய, தத்சொரூப சித்தியினை யெய்தியருளினார்.

திருச்சிற்றம்பலம்.

## ஸ்ரீ ஞானசம்பந்ததேசிகர் சரித்திரசாரசங்கிரகம்

முற்றிற்று.

ஸ்ரீ ஞானசம்பந்ததேசிகன்றிருவடிவாழ்க.



குருபாதம்.

திருக்கயிலாயபரம்பரைத்
தருமபுர வாதீனத்து ஆதிகுருமூர்த்திகளாகிய
ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகமூர்த்திகள்
திருவாய்மலர்ந்தருளிய

# சொக்கநாதக் கலித்துறை.

கண்ணுக் கினிய பொருளாகி யேயென் கரத்தில்வந்தாய்
விண்ணும் பரவிடு மற்புத மேயென்ன விஞ்சையிதான்
மண்ணும் புகழ்ந்திட வென்னையும் பூரண வாரியுள்ளே
நண்ணும் படிசெய் மதுரா புரிச்சொக்க நாயகனே. (க)

ஆதார மிந்நிலத் துன்னையல் லாலெனக் காருளரோ
மீதான மான வெளியினைக் காட்ட விரைந்துடன்வந்
தோதாம லோதி யெனைவச மாக்கினை யுள்ளொளியா
நாதா வருள்செய் மதுரா புரிச்சொக்க நாயகனே. (உ)

கல்லது நெஞ்ச மிரும்பே யிருசெவி கண்கண்மரஞ்
சொல்லுவ தும்பொய் யவமே தொழில்துக்க சாகரமா
மல்லலென் பங்குநின் னன்பர்பங் கானந்த மாகவைத்தாய்
நல்லது நல்ல மதுரா புரிச்சொக்க நாயகனே. (ங)

பாடும் படிசெய் நினைநினைந் தேத்திப் பணிந்தெழுந்தே
யாடும் படிசெய் மலமைந்து மேயடி யேனுளத்தே
வீடும் படிசெய்நின் னானந்த சாகர மேலெனவே
நாடும் படிசெய் மதுரா புரிச்சொக்க நாயகனே. (ச)

ஏறுத விண்ணப்பங் கூறுநின் றேனஃ தேதெனிற்கேண்
மாறும லிந்த மகாலிங்கந் தன்னின் மகிழ்ந்திருந்தே
வாறுப் பவத்துய ராற்றிச் சிவானந்த மன்பர்க்கென்றும்
பேறுக நல்குதி மாமது ராபுரிப் பிஞ்ஞகனே. (ரு)

ஆகங் கரணம் புவனங்கள் போகங்க ளானதெல்லா
மோகம் பொருந்தவைத் தாட்டுதி யேன்மும் மலாதியெல்லாம்
போக விடுத்தெனக் கானந்தங் காட்டப் பொறியுனக்கே
நாக மசைக்கு மதுரா புரிச்சொக்க நாயகனே. (௬)

ஆடாம லாடிப் புலன்வழி யிற்போ யனுதினமும்
வாடாமல் வாடி மயங்கினின் றேமன வாக்கிறந்து
கூடாமற் கூடிச் சிவானந்த வெள்ளக் குணக்கடலை
நாடாம னாட வருள்கூடல் வாழ்சொக்க நாயகனே. (௭)

பொய்யா மலமறுத் தென்னுளத் தானந்த பூரணத்தை
மெய்யா வளித்து விடாதுகண் டாய்விடி லோகெடுவேன்
ஐயா வெனதுயி ரேவினை மார்க்கத் தழுத்தியென்று
னையா தருள்செய் மதுரா புரிச்சொக்க நாயகனே. (௮)

பிறவாத சென்ம மழுந்தாத துன்பம் பிறந்தடியே
னிறவாத தானமு முண்டுகொ லோவெளி யேன்றிரும்ப
வறவாவிங் கென்னை யினியாட்டல் போதுநின் னானந்தத்தே
னறவார் பொழின்மன் மதுரா புரிச்சொக்க நாயகனே. (௯)

செய்யாத பாதக மொன்றில்லை யொன்றொன்று செய்ததெல்லா
மையா வளவில்லை நீயே யறிவையஃ தியார்செயலோ
மெய்யா வுயிர்க்குயி ரேயடி யேனிவ் வினையிலென்று
னையாம லாள்வை மதுரா புரிச்சொக்க நாயகனே. (௧௦)

அறிவைத் திருப்பிநின் பாதாரவிந்த மடையவல்ல
நெறியைக் கொடுத்து நிறுத்தினை யேநின்ம லாவினியென்
பொறியைத் தவிர்த்துநின் னானந்த சாகர பூரணத்தைப்
பிறிவற் றிருக்கவைப் பாயெனை யாண்டருள் பிஞ்ஞகனே. (௧௧)

சொக்கநாதர் கலித்துறை முற்றிற்று.

---

பண்டாரக் கலித்துறை யென்னும்
ஞானப்பிரகாச மாலை.

# நூல்.

திருவார் கமலையுண் ஞானப்ர காசன் றிருவடிக்கீழ்
வருவா ரவர்வழி வாரான் சமனு மலரயனுங்
கருவா யிடுவதற் கெண்ணானெந் நாளுங் கருத்தினினீ
வெருவாய் சுகத்தினில் வாழ்வாய் பரானந்த மேவிடுமே. (க)

முற்றவஞ் செய்து பிறந்தவர்க் கேயருண் மூர்த்திகொள்ளக்
கற்றவன் ஞானப் பிரகாச தேசன் கமலையில்வாழ்
வுற்றவன் முன்சென் றுயிர்ப்பாச நீக்கிக்கொண் டுண்மைநிலை
பெற்றவர்க் குண்டு பெறாதவர்க் கேயிலை பேரின்பமே. (உ)

சிற்பர நாதன் கமலையுண் ஞானப்ர காசசிவ
னற்புத முத்திக் கொடிகட்டி னனல மாந்துழன்று
பிற்படு வீர்கெடு வீர்பிறர் கூறும் பிரட்டைவிட்டு
முற்பட வோடி யவன்பாத பங்கய முன்னில்லுமே. (ங)

முத்த னனாதி யுயிர்க்குயி ரானவன் முத்தசித்த
சுத்த னகண்ட பரிபூ ரணத்தன் சுருதிக்கெட்டா
நித்தன் கருணைத் திருவுரு வானவன் நின்மலத்தன்
அத்தன் கமலையுண் ஞானப்ர காசனென் னாண்டவனே. (ச)

கடியார் பொழிற்செறி யாரூரன் ஞானப்ர காசன்முத்திக்
கொடியாள் பவனன்பர்க் கின்பே யளிப்பவன் கூறவொண்ணாப்
படியான வானந்த மேயுரு வானவன் பாரினம்பா
வடியா ரினங்கண் டறியா தவனென்னை யாண்டவனே. (ரு)

ஒருத்தனை யெண்ணி லுயிர்க்குயி ரானை யுணர்வுக்கெட்டாக்
கருத்தனை ஞானப் பிரகா சனைக்கம லாலயனை
நிருத்தனை யன்பர் நினைத்ததெல் லாந்தரு நித்தனைச்சற்
குருத்தனை யீசனென் றெண்ணார் நரகிற் குடிமக்களே. (௬)

வல்லான் கமலையுண் ஞானப்ர காசன் வசனமுணர்ந்
தெல்லாம் வெறுமித்தை யென்றுகண் டேனின்ப வாரியுள்ளே
செல்லாமற் சென்றதைத் தேக்காமற் றேக்கித் தினந்தினமு
நில்லாம னின்றுகொண் டேனிது வேமுத்தி நிச்சயமே. (௭)

காரே சுமந்த கிரிமீது நின்று கடுங்கனலி
னேரே யருந்தவஞ் செய்வீர் கமலைய னெஞ்சிலன்ப
ராரேனு மாளபவன் ஞானப்ர காச னடியரெனும்
பேரே படைமி னதுபோதும் போதும் பிறப்பறவே. (௮)

எல்லா முனது செயலென் றறிந்து மெனதுளத்திற்
பொல்லாத சங்கற்ப மேன்வரு மோபுர மூன்றெரித்த
வல்லாய் கமலையுண் ஞானப்ர காச மகிபவிது
சொல்லாய் கரண மயக்கமன் றேவென் றொழிலில்லவே. (௯)

அப்பார் கமலையுண் ஞானப்ர காசநீ யாண்டதனை
யிப்பா ரகிலாண் டமெலா மறிந்தன யானறியேன்
றப்பா துரைத்தனன் முப்பாச மென்னைத் தடுத்ததென்றுற்
செப்பா ருனைச்சிவ மென்ற துலகிற் சிரிப்பரன்றே. (௧௦)

நீயே துணையன்றி வேறில்லை யென்பதை நின்னருளு
னாயேன் மனமுந் திடமா யறியுமெந் நாட்டினுநான்
போயே திரியினும் ஞானப்ர காசநின் பொன்மலர்த்தாள்
பேயேன் மறப்பதுண் டோவினி மேலும் பிறக்கினுமே. (௧௧)

ஆரார் பகைக்கினு மாரார் நகைக்கினு மாவதென்ன
சீரார் கமலையுண் ஞானப்ர காசனென் சிந்தையுள்ளே
பேரா திருந்து சிவானு பவந்தரப் பெற்றதினால்
வாராது ஜென்மமும் போகாது பேரின்ப வாரியுமே. (௧௨)

எள்ளத் தனையன்பு நேராகச் செய்பவர்க் கின்பசுக
வெள்ளத் தழுத்திய ஞானப்ர காசன் விரைமலர்த்தாள்
உள்ளத்தி லொன்றும் புறம்பொன்று மாக வுரைக்குமன்பில்
கள்ளத் தவருக் கிரங்கா தளிக்கும் கடைப்பிறப்பே. (கரு)

தந்தையுந் தாயுந் தமர்களும் போகமுந் தாரணியு
மெந்தையு மெந்த முயிர்க்குயி ரானு மிரவினுக்கே
சந்தையும் பெற்ற கமலா லயனுந் தனுவுமென்றன்
சிந்தையு ஞானப் பிரகாச தேசன் றிருவடியே. (கச)

தாயே கமலையுண் ஞானப்ர காசநின் றன்னிடத்து
நாயே னுளத்தன் பொருசற்று மில்லைநல் லோர்கண்முன்னே
நீயே துணையென்றும் நின்னடி யானென்று நின்பெயரும்
பேயென்றினஞ்சொல்பிழைபொறுத்தாள்வைபெருமையனே. (கரு)

தேவே கமலையுண் ஞானப்ர காசநின் சேவடிக
ளாவே னெனைத்தடுத் தாட்கொண்டு மாள்கிலை யாகையினுற்
சாவே னெனத்துணிந் தாற்சிரிப் பாருனைத் தாரணியிற்
கோவே யிதுவறிந் தாள்வாய்மெய்ஞ் ஞான குருபரனே. (கசு)

சுரும்பார் கமலையுண் ஞானப்ர காசனைச் சுத்தனைநற்
கரும்பார் மொழியனைக் கற்கண்டைத் தேனைக்கண் ணாரமுதைப்
பொரும்பாச மன்பர்க் கறுப்பானை நன்னிலைப் பூரணனை
விரும்பா திராநெஞ் சேயெந்த நாளும் விரும்புவையே. (கஎ)

துன்பார் பிறப்பற வீடுற வோர்க்கொன்று சொல்லுகின்றேம்
வன்பா ருபாயக் களவின்றி யேமன வாக்குமொத்திட்
டின்பார் கமலையுண் ஞானப்ர காச ணிடத்தில்வைத்த
வன்பால் விளையும் பரிபூ ரணசுக மானதுவே. (கஅ)

கவுளிய மார்க்கங் கலந்தழித் தோன்கம லாலயத்தோ
னிவுளி நரித்திர ளாக்கிவைத் தோனிசைப் பாணனுக்குப்
பவுளி யுரைத்தருள் ஞானப்ர காசன் பயின்மடத்தில்
கெவுளி யுரைக்கும் பதிபசு பாசத்தின் கேள்விகளே. (ககூ)

இத்தனை காலங்க ளென்றறி வாரில்லை யென்னையுநீ
முத்த னெனும்படி யாகத் துணிந்தது முன்னவனீ
சித்தம தென்னவெல் லாம்வல்ல னென்றுனைச் செப்புவரென் (௨0)
அத்தன் கமலையுண் ஞானப்ர காச வருள்புரியே.

தாயே கொலவெண்ணி லார்காப்பர் சேயினைச் சற்குருவா
நீயே பராமுக மாயிருந் தானிட்டை யேயுரைக்கும்
வாயேது ஞானப் பிரகாச வுன்றன் மலர்ப்பதத்தை
நாயேன் சிரத்தணி வித்தாள் கமலையுண் ணாயகமே. (௨௧)

மாதா பிதாகுரு தெய்வந் துணையென்பர் மக்கட்குன்றன்
பாதார விந்த மடியேற்கந் நான்கெனப் பற்றிடென்றே
போதார் கமலையுண் ஞானப் ரகாச புகன்றுமென்பால்
நீதான் பராமுக மானா லுரைப்பதென் நின்மலனே. (௨௨)

படியார் கமலையுண் ஞானப்ர காச பரமவென்றுங்
கடிதாய் வயிறினி லேயுற லோவினிக் காயமுற
முடியாது நின்னின்ப பூரண சாகர மூழ்கியுன்றன்
அடியார்க் கடிய னெனவே திரிய வளித்தருளே. (௨௩)

விதம்பர லோகன் கமலா லயத்துள் விமலனின்பச்
சிதம்பர நாதன் கமலபொற் பாதமென் சிந்தையுள்ளே
யிதம்பர மாகிய ஞானப்ர காசனெல் லாமும்வல்லோன்
பதம்பர மானந்த வீடே கொடுக்கும் பணிந்தவர்க்கே. (௨௪)

செத்திப் படுத்தித் தெளிவாக்கிச் செந்நெற் றெளிப்பதுபோற்
புத்திக் கடினங் கரைத்தமின் னையின்ப பூரணத்தைச்
சத்திக்கு மேலினைக் கீழினை மும்மலத் தன்மைதனைத்
தித்திக்கச் சொன்னது ஞானப்ர காசன் றிருவுளமே. (௨௫)

அமல பதியைக் கருணா லயனை யருளுருவாய்க்
கமலை வருகுரு ஞானப்ர காசனைக் காசினிக்கே
சமல மலமற வானந்த சாகரஞ் சாரநல்ல
விமல மலர்கொண் டருச்சித்தன் போடென்றும் வீழ்ந்திறைஞ்சே.

ஞானப்ர காசன் கமலையின் வாழ்குரு நாதன்சொன்ன
மோனப்ர காசத்தைக் கேட்டவன் றேநெடு மூச்சலைவற்
றானப்ர காசச் செயலற்றென் னுள்ள முருக்கியென்றும்
வானப்ர காசத்து நேயத்தி லேசென்று மண்டியதே. (௨௭)

பொன்பதி னாயிர மாற்றுள்ள மாலையும் புல்லுங்கல்லு
மென்பு மிறகுந் தரித்தது போலினி தாயவுள்ளத்
தன்ப ருரையையு மாரூர வென்னுடை யன்பில்சொல்லு
மின்புடன் கேட்டருண் ஞானப்ர காச வெழிற்குருவே. (௨௮)

கனக்கும் பொதிக்கு மெருதுக்குந் தன்னிச்சை கண்டதுண்டோ
வெனக்கு முடற்கு மெனதிச்சை யோவிணங் கார்புரத்தைச்
சினக்குங் கமலையுண் ஞானப்ர காச சிதம்பரனின்
றுனக்கிச்சை யெப்படி யப்படி யாக வுரைத்தருளே. (௨௯)

பாசங் கெடுத்துப் பசுத்துவம் போக்கிப் பராபரத்தில்
நேசங் கொடுத்து நிறுத்தின னேநீண்ட தோர்கயிலை
வாசன் செழுமதி மானு மழுவு மறைத்துவந்த
தேசன் கமலையுண் ஞானப்ர காசநந் தேசிகனே. (௩௦)

தருராஜ ராஜன் றுணைவனெந் நாளுஞ் சகத்திலன்பால்
வருராஜர் பொன்முடி தீண்டும் பதாம்புயன் வஞ்சமலக்
கருராசி தீர்க்குங் கமலேசன் ஞானப்ர காசனென்னுங்
குருராஜன் சந்நிதிக் கேமன மேயென்று கூடுவதே. (௩௧)

வான்கண் டுளங்களி கூர்மஞ்ஞை போலுன் மலர்ப்பதத்தை
நான்கண் டுளங்களி கூர்வதெந் நாணளி னாலயத்துட்
டேன்கண் டுளங்களி கூர்கம லேச தினமுனிவர்
தான்கண் டுளங்களி ஞானப்ர காச தயாநிதியே. (௩௨)

தேனே கமலையுண் ஞானப் பிரகாச தேசிகநீ
தானே கமல பதஞ்சூட்டி யாண்டனை யான்றனித்தே
வானே யெழுமதி காணுச் சகோர மனமதுபோ
லானேனின் சந்நிதி யெப்போதுங் காண வருள்புரியே. (௩௩)

கருவாச லிற்புலக் கள்வர்தம் வாசலிற் கட்டளையன்
பெருவாச லின்மற்றைப் பேதையர் வாசலும் பின்செல்வரோ
மருவாசம் வீசும் மதுரேசன் சம்பந்தன் வாழ்மடத்தின்
றிருவாச லிற்செல்லுஞ் செல்வர்தம் வாசலிற் செல்பவரே. (௩௪)

பெருவே தனையுறுங் காயத்தை நீக்கியுன் பின்றொடர்ந்து
வருவே னதனையு மாற்றினை யேயந்த வாக்குக்கஞ்சித்
திரிவேன் கமலையுண் ஞானப்ர காச சிதம்பரசற்
குருவே யுனைப்பிரிந் தின்னு மிருக்கவுங் கூட்டியதே. (௩௫)

வரந்தரு பாதமென் சென்னியிற் றோய்ந்திட வைத்தெடுத்தான்
பரந்திரு கண்ணிணைத் தன்னினிற் காட்சி பதித்துவைத்தா
னுரந்தனில் வைப்பதென் முன்னின்ப சாகரத் துள்ளழுத்திப்
புரந்தனன் கூடலில் வாழ்ஞான சம்பந்த போதகனே. (௩௬)

முற்றிற்று.

—

குருஞானசம்பந்ததேசிகர் குரைகழல்வாழ்க.

